# இசையில் - இறைவடிவம்

(சிரோமணி, வித்வான் & ஸங்கீதம் இசை ஆராய்ச்சியாளர் T. G. அனந்த சுப்ரமண்யம், ஸரஸ்வதி மஹால் தஞ்சாவூர்.)

இறைவனையடைய பல வழிகளிருந்தாலும், சுலபமாக அடைய, அறிய ஒரே வழிதான் உண்டு அதுவே இசையாகும், இசையாலேயே பேரின்பப் பேற்றையடைந்த மஹநீயர்கள் எத்தனையோ பேர்கள். நாயன்மார்களும், ஆழ்வார்களும் இசைப் பாக்களைக் கொண்டே இறைவனைப் பாடி வழிபட்டு பேரின்பப் பேற்றை யடைந்துள்ளார்கள். திருஞானசம்பந்தர் இறைவியின் பாலுண்டனுடன் தேவாரப் பாக்களை இசையுடன் பாட வாரம்பித்தார். அதைப் பின்பற்றியே பல பெரியோர்கள் இறைவனைக் காண, அடைய, வழிபட இசைப்பாக்களைச் செய்தும், பாடியும் வழிபடத் தகுதியென கருதினுர்கள். அத்தகைய பெரியோர்களில் ஜயதேவர், நாராயணதீர்த்தர் முதலானோர்கள். அவர்களுக்குப் பிறகு ஸ்ரீதியாகராஜர் தோன்றினுர். தியாகராஜரும் அவர்களைப் போலவே இசைப்பாட்டை பாடி இறைவனை வழிபட்டார். ஆனுல் தியாகராஜர் இசைப்பாட்டால்பாடி வழிபட்ட இறைவன் ஸ்ரீராமன். ஆனுல் ஸ்ரீ தியாகராஜருக்கு எல்லா கடவுளும் ஒன்று என்ற மனப்பான்மையால் ஸ்ரீராமனிடத்தில் எல்லா தெய்வங்களையும் கண்டார். ஸ்ரீ தியாகராஜர் வெறும் அருளால் மட்டும் இசைப் பாட்டுக்களைப் பாடவில்லை. இவர் முறையாக ஆசிரியரின் வழியாகக் கற்றுக் கொண்டவர். ஆகையால்தான் இவர் பாட்டில் இசை நுணுக்கங்களும், இலக்கணங்களும் காணப்படுகின்றன. தனக்கு ஆசிரியரைத் தானே தேர்ந்தெடுத்துக் கொள்ளவில்லை. நாதோபாஸகரும், பரம்பொருளைக் கண்டு இன்புற்றவரும், முனிசிரேஷ்டரான ஸ்ரீ நாரதரே ஆசிரியராக அமைந்தார். ஸ்ரீதியாகராஜருக்கு ஸ்ரீ நாரதர் ஸங்கீதவித்தையுமுபதேசித்து, ஸ்வரார்ணவம் என்ற ஒப்பற்ற இசைநூலையுமருளினுர். ஸ்ரீ தியாகராஜருக்குக் கிடைத்த பேறு யாருக்கும் கிடைத்ததில்லை; கிடைக்கப் போவதுமில்லை. ஸ்ரீ நாரதரின் அருளால் ஸங்கீதவித்தையை யடைந்ததும், தனக்கு அவரே ஆசிரியரென்பதை கீழ்க்காணும் கீர்த்தனையில் தெரிவிக்கிறுர் :—

பைரவி] [ஆதி

ஸ்ரீ நாரத ! முநீ குருராய கம்டி
மேநாடி தபமோ குருராய
மனஸார கோரிதி குருராய நேடு
கனுலார கநுகொம்டி குருராய

மீ ஸேவ தொரிகெநு குருராய பவ
பாசமு தொலகெநு குருராய
நீவே ஸுஜ்ஞான ஸுகி குருராய
நீவே யஜ்ஞான சிகி குருராய
ராஜில்லு வீணகல குருராய த்யாக
ராஜுனி ப்ரோசின ஸத்குருராய.

மேலும் "வரநாரத" [விஜயஸ்ரீ - ஆதி] என்ற கீர்த்தனையில் ஸ்ரீ நாரதரைப் புகழ்ந்து கூறுகிறார். "நாராயணன் ஸ்மரணை மூலம் எப்பொழுதும் பேரானந்தம் அனுபவிக்கிற நாரத குருவே! சரத்சந்திரனைப் போல் ஒளி பொருந்தியவரே! பரிசுத்தமானவரே! உலகனைத்திற்கும் ஸத்குரு என்று போற்றப் படுபவரே! பாவுகச்ரேஷ்டரே! என்னைக் காப்பாற்றும்" என்றும்,

"நாரத குருஸாமி" [தர்பார்-ஆதி] என்ற கீர்த்தனையில் "ஸங்கீதம், யோகம், வேதம் இவற்றைக் கரைகண்டவரும் மகாபரிசுத்தரான நாரதகுருவே இனியேனும் எனைக்காக்கமாட்டாயா? எல்லா ஸங்கீத சாஸ்த்திரம், யோகம், வேதங்கள் இவைகளில் தேர்ச்சி பெற்றவனே! பரமபாவனமானவனே! ஆகமம், புராணம், இதிஹாஸம், சரிதம் முதலியவைகள் எவரால் உண்டாயினவோ, கணவனை தானம் செய்யும் புத்தி ஸத்யபாமைக்கு எப்படியாயுற்றதோ அதற்குக் காரணமானவனே! மிகவும் காந்தி பொருந்தியவனே! உன்னைத் தவிர முனிவர்களுக்கு புகலிடம் ஏது? அத்தகைய பெருமை வாய்ந்தவனே! கர்ப்பத்திலிருந்த பிரஹ்லாதனை இந்திரனிடமிருந்து காத்து. அஷ்டாக்ஷரமான நாராயணோபதேசத்தைச் செய்தவனே! பூமியில் உன்னையே நம்பினேன்" என்று கூறுகிறார். ஆசிரியனைப்பற்றிப் புகழ்ந்து பாடுவதில் ஸ்ரீ தியாகராஜருக்குத்தான் என்ன ஆசை! மேலும் மற்றொரு கிருதியில்.

கானடா] [ரூபகம்

"ஸ்ரீ நாரத! நாதஸரஸரஸீருஹப்ருங்க! சுபாங்க!
தீனமானரக்ஷக! ஜகதீச! பேஷ ஸங்காச!
வேதஜனிதவரவீணாவாதனதத்வஜ்ஞ!
கேத கர த்ரிதாப ரஹித! கேசர விநுத!
யாதவ குலஜாப்த! ஸதாமோதஹ்ருதய! முனிவர்ய!
ஸ்ரீத தியாகராஜவினுத! ஸ்ரீகர! மாம் பாஹி"

இந்த கீர்த்தனை சுத்த ஸம்ஸ்க்ருத மயமானது.

" நாதமாகிய தாமரையை நாடும் வண்டைப் போன்ற ஸ்ரீ நாரதரே ! அழகிய திருமேனியை யுடையவரே ! எளியோரைக் காப்பவரே ! சந்திரனுக்குச் சமமானவரே ; வேதகோஷத்திலிருந்து பிறந்த வீணையின் உண்மையை யறிந்தவரே ! துன்பங்களைத் தரும் தாபத்ரயங்களை வென்றவரே ! தேவர்கள் போற்றும் முனி ச்ரேஷ்டரே ! கிருஷ்ண பகவானின் நண்பரே ! எப்பொழுதும் ஸந்தோஷமான மனமுடையவரே ! நன்மைகளை யருளுபவரே ! என்னைக் காப்பவரே !

என்று கூறுகிறார். ஸ்ரீ தியாகராஜருக்கு ஸங்கீத சாஸ்த்திரத்தை யுபதேசித்தவர் ஸ்ரீ நாரதரே யென்பதில் ஐயமில்லை. அத்தகைய ஸங்கீத புலமை பெற்ற ஸ்ரீ தியாகராஜர் இசையாலேயே இறைவனைப் பார்த்தார், பேசினார். இரண்டறக் கலந்தார். பக்திக்கும் இசைக்கும் உறவைக் கண்டார் அவ்வுறவே இசைப் பாட்டுக்களாகப் பெருகி பக்தியாக அமைந்தது. இந்த அபிப்ராயத்தைத் தான் " ஸங்கீதஜ்ஞானமு பக்தி விநா ஸன்மார்க்கமு கலதே " என்று கூறுகிறார். இறைவனிடம் பக்தியில்லா இசை ஞானம் பயனளிக்காது என்றார்.

" ஸங்கீத சாஸ்த்ரஜ்ஞானமு
ஸாரூப்ய ஸௌக்யதமே மனஸா !

[முகாரி — தேசாதி] என்ற கீர்த்தனையில் ஏ மனமே ; ஸங்கீத சாஸ்த்திரத்திலேற்படும் நுண்ணறிவு ஸாரூப்யமென்ற மேலான பதவியைத் தரவல்லது. சிருங்காரம் முதலிய ஸகல ரஸங்களுடைய ஸாரமும் நிறைந்த ராமபிரானின் சுபசரிதமாகிற ஆனந்தக் கடலோடு கூடிய ஸங்கீத சாஸ்த்திர ஞானம் அன்பு, பக்தி, நல்லோரிடம் பற்றுதல் லக்ஷ்மி கடாக்ஷம், தமசமாதி குணங்கள் நிறைந்த உயர் நெறி, புகழ், பொருள் இவை யனைத்தையும் தரும் " என்று கூறுகிறார்.

ஆகையால் ஸங்கீத சாஸ்த்திரத்தை நங்குணர்ந்து பாடினால் தான் இறைவனுக்குத் திருப்தி ஏற்படும். தியாகராஜர் ஸ்ரீராமனை பரம்பொருளாகவே கருதினார். நாதோபாஸனையால் ஸ்ரீராமனை யுபாஸித்தார், பேரின்பப் பேற்றையு மடைந்தார். ஸ்ரீராமதாரக மந்த்ரமே பேரானந்தத்தைக் கொடுக்கு மென்பதற்கு

" நாதலோலுடை பிர்மானந்த மந்தவே மனஸா !
ஸ்வாது பலப்ரத ஸப்தஸ்வரராக நிசயஸஹித "

[கல்யாண வஸந்தம் — ரூபகம்] என்ற கீர்த்தனையில் " ஏ மனமே ! அழிவற்ற பேரின்பத்தைத் தரவல்லதும், ஸப்த

ஸ்வரங்களால் சித்தரிக்கப்படும் ராகங்கள் அடங்கியதுமான நாதவித்யையிலீடுபட்டு பிரம்மானந்தமடைவாய். விஷ்ணு, பரமசிவன், பிரம்மா, இந்திரன், குஹன், விநாயகர் முனி சிரேஷ்டர்கள் முதலியோர் இந்த நாதோபாஸனையையே கொண்டாடுகின்றார்.'' என்று கூறுகிறார் ஒரே நாதந்தான் ஸ்வரம், ராகம், பாட்டு முதலியவைகளாக மாறிவிடுகிறது. நாதோபாஸனை செய்வதின் மூலம். யாகயோகாதிகளால் கிடைக்கும் பலன்களை யடையலாமென்பதை கீழ்க் காணும் கிருதியில் காணலாம்,

'' ராகஸுதாரஸபானமுஜேஸி ராஜில்லவே மனஸா !
யாக, யோக, த்யாக, போக பல மொஸங்கு
ஸதாசிவமயமகு - நாதோங்காரஸ்வர
விதுலு ஜீவந்முக்துலனி த்யாகராஜுதெலியு

[மயூரத்வனி — (ஆந்தோளிகா,) தேசாதி] ஏ ! மனமே ! ராகமென்ற அம்ருத ரஸத்தைப் பருகித் தெளிவுறுவாய் பலவிதமான ச்ரமத்தால் செய்யக் கூடிய யாக, யோக, த்யாக இவைகளின் பலன்களை ஸுலபமாகத் தரவல்லது நாதோபாஸனை. ஆத்மாவிடமிருந்து உண்டாகி, நாதத்தையே உடலாகக் கொண்டு ஓங்காரமாகப்படும் கானமே ஸதாசிவாகாரமாயுள்ளது என்ற உண்மையை அறிந்தவர்கள் ஜீவன் முக்தர்கள் என்பதை நானறிவேன்'' என்று.

மேலும் இறைவனைத் தானே பாட வேண்டுமென்று ஏதாவது தாறுமாறாகப் பாடி வழிபடக் கூடாது. ஸங்கீத சாஸ்த்ரத்தையறிந்து. அதன் இலக்கணத்தோடு கூடிய பாட்டே பகவானுக்கு அர்ப்பணமாகு மென்பதை மற்றொரு கிருதியில்.

செஞ்சு காம்போதி] [ஆதி

'' வரராகல யஜ்ஞுலு - தாமனுத்ஸு வதரேரய்யா
ஸ்வரஜாதி மூர்ச்சன பேதமுல்
ஸ்வாந்த மந்து தெலியக யுண்டின ''

ஸங்கீத சாஸ்த்ரம் ஸ்வரம், ஜாதி, மூர்ச்சனை முதலிய பல அங்கங்களோடு கூடியது. ஆத்மாவினூறிய தெய்வபக்தி மனதைத் தூண்டவும். அதனுலேற்படும் அக்னியும், வாயுவும், நாபி-ஹ்ருதயம், கண்டம், தலை, நாக்கு, மூக்கு முதலிய உறுப்புக்களின் வழியே வியாபித்து அழகிய நாதம் பிறக்கிறது. இது ஓங்கார வடிவமும், தெய்வத்தன்மையும் வாய்ந்தது. இதை ஞானிகள் நன்றுக உணர்ந்து ஸத்துவமயமான கானவித்யையின் மூலம் ஓங்கார உபாஸனையின் பலனைப் பெறுவர், இந்த

கீர்த்தனையின் தாத்பர்யத்தை '' ஸங்கீததர்பணம் '' என்ற நூலில் பார்க்கலாம்.

'' ஆத்மனு ப்ரேரிதம்சித்தம் வந்நிமாஹந்தி தேஹஜம் |
பிரம்மகிரந்திஸதிதம் பிராணம் ஸப்ரேரயதிபாவகஃ ||

आत्मना प्रेरितं चित्तं वह्निमाहन्ति देहजम् ।
ब्रह्मग्रन्थिस्थितं प्राणं सप्रेरयति पावकः ॥

[ஸ்வராத்யாயம் 33 ச்லோகம்]

ஸங்கீத ஜ்ஞானத்தால் மோக்ஷ மார்க்கத்தை யடையலா மென்பதற்கு '' யாஜ்ஞயவல்க்ய ஸ்ம்ருதி '' கூறுகிறது.

'' ச்ருதி ஜாதிவிசாரதஃ தாளஜ்ஞச்சாப்ரயா
ஸேன மோக்ஷமார்கம் ஸ கச்சதி ''

"श्रुति जातिविशारदः तालज्ञश्चाप्रयासेन मोक्षमार्ग स गच्छति" என்று நாதம் உற்பத்தியாகும் ஸ்தானங்களை தியாகராஜர் '' சோபில்லு '' என்ற கீர்த்தனையின் அனுபல்லவியில் கூறியுள்ளார்.

பக்தியில்லாத ஸங்கீத ஜ்ஞானமோ - பாட்டோ பயனளிக் காதென்பதை :—

ஸாரமதி] [ஆதி

'' மோக்ஷமு கலதா புவிலோ ஜீவன்
முக்துலுகானிவாரலகு
ஸாக்ஷாத்கார நீ ஸத்பக்தி
ஸங்கீதஜ்ஞான விஹீனுலகு ''

என்ற கீர்த்தனையில் '' பக்தியுடன் கூடிய ஸங்கீத ஜ்ஞான மில்லாதவர்கள். பிராணவாயு அக்னி இவை சேர்ந்து ஓம் என்ற ப்ரணவமுதித்து அதனின்றும் ஸப்தஸ்வரங்கள் எழுந் தன என்கிற உண்மையை யறியாதவர்கள், வீணை வாசிக்கத் தெரிந்தவர்கள் இவர்களெல்லோரும் சிவதத்துவத்தை உணரா தவர்கள். ஜீவதசையில் பற்றெழித்து விரக்தியடைந்தவர்க ளாயிருந்தாலும். ஜ்ஞானமில்லாதவர்களாக ஆகிறார்கள். இத் தகையவர்களுக்கு எப்படி கைகூடும் பரகதி ? '' கூறுகிறார். எல்லா நாதமும் ஓங்கார ஸ்வரூபம் அந்த ஓங்காரத்தை ஜபித் துத்தான் மகரிஷிகளும், மஹநீயர்களும் மேன்மையயடைந் துள்ளார்கள் அதேபோல் நாதோபாஸனையால் பேரானந் தத்தை யடையலாமென்பதற்கு ஒரு கீர்த்தனையில் கூறுகிறார்.

ஆரபி] [ரூபகம்

நாதஸுதாரஸம்பிலநு
நராக்ருதியாயெ மனஸா
வேத புராணுகம சாஸ்த்ரா
துல காதாரமௌ.

என்று ஸகல சப்தங்களும் ஓங்காரத்திலிருந்து ஜனித்தவை துக்கத்தை யகற்றி அழிவற்ற ஆனந்தத்தை கொடுக்கவல்லது ஸங்கீதம், இந்த அம்ருதரஸ, வேதம், ஆகமம், சாஸ்த்திரம், புராணம் முதலியவைகளுக்கு ஆதாரமான ஓங்காரத்தின் ஸாரம். '' இதுவே புவியில் ராமனுக உருவெடுத்துள்ளது. அவனுடைய வில்லின் ஏழு மணிகளே ஸப்தஸ்வரங்கள். மணிகள் அலங்கரிக்கும் ராகங்களே அந்த வில் மூன்று நாண்கயிறுகளும் கனம், நயம், தேசியமென்ற பிரிவுகளாகும் பல ரஸங்கள் சேர்ந்த ஸாஹித்யமே ஸ்ரீராமனின் தங்கு தடையின்றி பறக்கும் பாணங்கள். ராமனே பூஜிப்பதே உலகில் பாக்கியமாகுமென்று ஸ்ரீ தியாகராஜர் ராமனே நாதப்ரம்மமாகவும், நாதப்ரமமத்தை ராமனுகவும் கண்டார். அந்த ராமனேயே இசைவடிவாகவே பாடுகிறுர். '' கானமூர்த்தே '' என்ற கீர்த்தனேயில் '' இசை வடிவே மூவுலகங்களேயும் காப்பவனே, அர்ஜுனனுக்குத் தோழனுகவும், பார்வதி தேவிக்குச் சகோதரனுகவும் விளங்குபவனே !' என்று கூறுகிறுர்.

ஸ்ரீ ராமனின் சரிதத்தைக் கேட்டாலே அவனுக்கு அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு வகைப் பலன்களும் கிடைக்கு மென்பதை

மத்யமாவதி] [ஆதி

'' ராமகதாஸுதாரஸபாநமொக
ராஜ்யமு ஜேஸுனே ''

என்ற கீர்த்தனேயில் பாடுகிறுர். வேதங்களின் அந்தமான உப நிஷத்துக்களின் ஸாரமான ஓங்காரத்தினின்றும் எழுந்த ஸப்த ஸ்வரங்களின் இன்னிசையாகிற மலேமீது விளங்கும் தீபம் போன்றவனே ;

'' வேதசிரோ மாத்ருஜ ஸப்தஸ்வரநாதாசலதீப ''

[ஸாமஜவரகமன — ஹிந்தோளம் — ஆதி] என்று நாதங்களின் ஸ்வரங்களே விளக்காகக் கூறி அக்ஞான இருட்டைப் போக்க இவ்வடிவமான தீபம்போல் ராமனே வழிபடுகிறுர். மேலும் ஸ்ரீராமன் ஸங்கீத வடிவமென்பதற்கு '' மித்ரிபாக்யமே '' [கரஹரப்ரியா — ஆதி] என்ற கீர்த்தனேயில் '' பல

ராகங்களை ஆலாபனை செய்கையில் அவைகளை செவியுற்று மெய் சிலிர்த்து அந்த நாதமே கோதண்டராமனுக அவதரித்த தத்து வத்தின் ரகசியத்தை உணர்ந்த லக்ஷ்மணனின் பாக்யமே பாக் யம்'' என்று கூறுகிருர்.

'' பாகு விந்த ராகமுல நாலாப முசேயகா ''

என்றும் மற்ருெரு இடத்தில்

'' நாதஸ்வர மனுவர நவரத்னபுவேதிகபை ''

என்று பிரணவ நாதத்திலிருந்து உண்டான ஸ்வரங்கள் அலங் கரிக்கும் இனிய கீதமே நவரத்னமிழைத்த மேடையில் விளங் கும் ராமனே என்றும் ராமன் உட்காரும் பீடம்கூட இசைமய மானதென்று கூறுகிருர் இசைவடிவான ராமனின் நாமமும் மேன்மையான தென்பதை

'' ஸ்வர ராகலய ஸுதாரஸமந்து
வர ராமநாமமே மனே கண்ட
சக்கெர மிச்ரமு ஜேஸி புஜிம்சே ''

என்று கூறுகிருர்.

'' நாதப்ரம்மானந்த ரஸாக்ருதிகல ''

என்றும் பூர்வஜன்ம புண்யத்தால் தான் இந்த ஜ்ஞானம் ஏற் படுமென்றும்

'' ஸுதாவர ஸங்கித ஞானமு ''

என்ற கீர்த்தனையில் கூறுகிருர். மேலும்

'' ஸ்வரராக ஸுதாரஸயுதபக்தி ஸவர்காபவர் கமுரா ஓ மனஸா ''

என்று ஸங்கீதத்தோடு கூடிய பக்தி ஸ்வர்க்கத்தைக் கொடுக்கு மென்று பாடுகிருர். அதே கீர்த்தனையில்

'' ஸஹஜ பக்திதோ ராகஜ்ஞானஸஹிதுடு முக்துடுரா ஓ மனஸா ''
'' ரஜதகிரீகுடு நகஜகு தெல்புஸ்வரார்ணவ மர்மமுலு ''

இம்மாதிரி ஸங்கீதத்தைப்பற்றிக் கூறுகிருர். மேலும் இறைவனைக் காண இசையை மிக மரியாதையுடனும், கௌர வத்துடனும் உயாஸிக்க வேண்டும். இதை ஸ்ரீ தியாகராஜர் வெகு அழகாக விளக்குகிருர்.

'' நித்துர நீராகரிம்சி முத்துக தம்புரபட்டி
ஸுத்தமைன மனஸுசே ஸுஸ்வரமுதோ
பத்து தப்பக பஜியிம்சு - பக்த பாலநமுஸேயு
தத்தய சாவிலி நீவு ''

[தோடி — ஆதி — கத்தனுவாரிகி] தூக்கம் விடுத்துத் தம்புராவை நன்றாக ஸ்ருதி சேர்த்து மீட்டித் தூயமனதுடனும் ஸுஸ்வரத்துடனும் ஸம்பிரதாய முறை அறிந்து பஜனை செய்து ஆனந்திக்கும் பக்தர்களைக் காக்கும் "கருணை மூர்த்தியே"

இம்மாதிரி இசைக்கும் - இறைவனுக்கும தொடர்பை இன்னும் எவ்வளவோ கீர்த்தனையில் கூறுகிறார்.

"ஸொகஸுகா ம்ருதங்க தாளமு ஜத கூர்சி
நிநு ஸொக்கஜேயு திருடெவ்வடோ" என்றும்

"ஸ்ரீராம பக்தியுலேநி நரஜன்ம
மெத்தியேமி எத்தகும்டியேமி"

என்றும் கூறுகிறார். இறைவன் ராமனைக் கண்டார் ராமனை பல இசைப் பாட்டுக்களால் பாடி பரவசமானார். இறைவனை யடைய நாதோபாஸனையே சிறந்த வழி என்பதை மெய்ப்பித்துக் காட்டினார். எவ்வளவோ மஹநீயர்கள் பாடியிருந்தாலும், வழிபட்டிருந்தாலும். ஸ்ரீ தியாகராஜர் பாடியதும் வழிபட்டதும் தனிச் சிறப்பு வாய்ந்தது. தியாகராஜன் கீர்த்தனைகளை பாமரர் முதல் பண்டிதர் வரையில் பாடலாம், கேட்கலாம், ரஸிக்கலாம். இப்படியாக ஸ்ரீராமனை பாடியதோடல்லாமல் இதர தெய்வங்களையும் பாடியுள்ளார்: சைவ - வைணவபேதமின்றி எல்லாம் ஒரே மதம் என்ற கொள்கையைச் சேர்ந்தவர் இசையால் பேரின்பப் பேற்றை யடைந்தவர் ஸ்ரீ தியாகராஜர் என்பது ஸந்தேகமில்லை. நாமும் அவ்விசைகளைப் பாடி இறைவனையடைய முயற்சிப்போமாக.

